பசாரங்களையுந் திரட்டி வசனரூபமாக எழுதி, முதற்
பாலபாடத்தினிறுதியிலே ஆத்திசூடி, கொன்றைவேந்
தன் என்னும் நீதிநூல்களையும், இரண்டாம் பாலபா
டத்திலே அவைகளுக்கு உரையையும் எழுதிச்சேர
த்து அச்சிடுவித்தனர். எவ்வளவோகாலமாகப் பற
பலராலே பற்பலவிதமாக அருத்தம் பண்ணப்பட்டு,
அநேகருக்கு இதுதான்பொருளோ, அதுதான்பொரு
ளோ என்று சந்தேகமுறக் கிடந்தவைகளாகிய 'அ
நந்தருக்கேல்" முதலியவைகளின் பொருள் மிக எளி
தில் விளங்கக்கிடந்தன. அப்போது அவருக்கு வயசு
௨௮ ஆயிற்று.

1851

அடுத்த விரோதிகிருது௵ சித்திரைமீ கொலைம
றுத்தல் முதலியவும், அவ்வருஷம் ஐப்பசிமீ பவா
நந்திமுனிவரியற்றிய நன்னூலுக்கு சங்கர நமச்சிவா
யப்புலவரால் செய்யப்பட்டு, திருவாவடுதுறைச் சிவ
ஞானசுவாமிகளால் திருத்தப்பட்ட விருத்தியுரையை
யும், திருச்செந்திநிரோட்டக யமகவந்தாதிக்கும். தா
மெப்பொழுதும் நியமமாகப் பாராயணம்பண்ணிவந்த
திருமுருகாற்றுப்படைக்கும் உரை எழுதி, அவைகளை
யும் அச்சிடுவித்தனர். தமது வித்தியாசாலை வண்ணா
ர்பண்ணையிலே தாபிக்கப்பட்டிருத்தலால், அச்சியந்தி
ரத்தையும் அவ்வித்தியாசாலைக்குச் சமீபமாக வைத்தி
ருந்தால் அவ்விரண்டினையும் பிரயாசையின்றி நடத்த

லாமென்று நினைந்து, அச்சியந்திரத்தை வைத்தீசுரன் கோயிலுக்குத் தெற்கேயுள்ள மடத்துக்கு நல்லூரினின்றுங் கொண்டுவந்தார். அச்சுக்கூடவேலைகள் அதிகப்பட்டு இராத்திரிகாலங்களிலும் மடத்திலே தங்கவேண்டியிருந்தமையால், அம்மடத்தைத் தாமே தமக்கு உறைவிடமாக்கிக்கொண்டார். அப்போது அவருக்கு வயசு ௨௧ ஆயிற்று.

பத்தியரூபமாகவிருக்குந் திருத்தொண்டர் * பெரியபுராணத்தைக் கத்தியரூபமாக்கினால் அது சைவசமயிகளுக்குப் பத்தியை விளைவித்தலாகிய பயனைக்கொடுக்குமென்று கருதி, அதனைச் சுத்தச் செந்தமிழ்நடையில் எழுதி அச்சிட்டார். இப்படி அநேகபுத்தகங்களை அச்சிட்டபின்னர், சுன்னாகத்தில் வசித்த முத்துக்குமாரக்கவிராயர் கிறிஸ்துமதத்திலுள்ள அபாத்தங்களையும், ஆட்சேபத்துக் கிடமாக இருந்தவைகளையுந் திரட்டிப், பாடியிருந்த ஞானக்கும்மி என்னும நூலைப் பரிசோதித்து, நல்லூர் சி. விநாயகமூர்த்திச செட்டியார்பேரால் அச்சிட்டு வெளிப்படுத்தினார். அப்போது அவருக்கு வயசு ௩௰ ஆயிற்று.

இஞ்ஞானக்கும்மி வெளிப்படுத்தப்பட்ட உடனே கிறிஸ்துமதத்தவர்களெல்லாருந் திரண்டு, கூட்டங்

* பெரியபுராணத்தைக் கத்தியரூபமாகச் செய்தமைக்குக் காரணம் அப்புத்தகத்தின் முகவுரையிற் காட்டியிருக்கின்றார். அதனைப்பார்த்தறிக.

கூடி, இவ்வச்சுக்கூடத்தை இல்லாமற் பண்ணவேண்டு மென ஆலோசனைபண்ணினார்கள். ஆலோசனைபண் ணியும், பரமகருணாநிதியாகிய சிவபெருமானுடைய மகிமை இவ்வச்சியந்திரம் வாயிலாக எவ்விடங்களி லும் விளங்கவேண்டியிருந்ததனால் அவர்களுடைய முயற்சி சித்திக்கவில்லை. பின்பு தங்கள் முயற்சி பலி யாமை கண்டு, நாவலருக்குஞ் சைவசமயத்திற்கும், ஞானக்குரு··ிக்கும் விரோதமாகப் பிரசங்கங்கள் வாயி லாகவும் பத்திரிகைகள் வாயிலாகவும் வேண்டியவா றே பேசியும் எழுதியும் வந்தார்கள். அக்காலத்திலே, உடுவிற் பாதிரியாரிடத்தே உபதேசியாயிருந்த ஒரு வர் தான் பிரசங்கிக்கப் போகுமிடங்களிலெல்லாம் கிறிஸ்துமதப்பிரசங்கத்தை ஒருவாறு சுருக்கி, சைவச மயதூஷணமே பேசிவந்தார். அம்மட்டில் நில்லாது பத்திரிகைகளிலும் மறைந்து நின்று எழுதிவந்தார். இத் தூஷணங்களை ஒரு சிறிதும் சகிக்கலாற்றாத நாவலர் வச்சிரதண்டம் என்னும் துண்டுப் புத்தக த்தை எழுதி விநாயகமூர்த்திச் செட்டியார்பேரால் வெளிப்படுத்திவிட்டார். அதன்பின் அவ்வுபதேசியா ரும், பாதிரிமார்களும், அவர்களைச்சார்ந்த பிறரும் அடங்கியிருந்தார்கள்.

கிறிஸ்தவர்கள் சுப்பிரமணியப்பெருமான் எம்போ ல்வார் எனவும், அவர் எம்மைப்போல இருபெண்க

னைக் கலியாணஞ் செய்திருக்கின்றார் எனவும், அம்மனைவியர்களில் ஒருவராகிய வள்ளிநாயகியைத் தாம் விரும்பியபோது, அவ்வள்ளிநாயகி தமது விருப்பத்திற்கு உடன்படாமைகண்டு தமது தமையனராகிய விக்கினேசுரரை அச்சமயத்தில் யானையாய் வரும்படிசெய்து, அவர் வாயிலாகத் தம்மோடு கூடும் ...ாகையால் நம்மினு மிழிந்தவரெனவும், ...யவரை முற்றறிவுடைய கடவுளாகக் ...படுதல் ஒருவாற்றானுங் கூடாதெனவும், ...வண்டியவாறே பேசிவந்தார்கள். இவை ...பியுற்ற நாவலர் கிறிஸ்தவர்களுடைய ...தம்படியாகவும், அவர்களுடைய தூர்ப் ...மயங்கிக்கிடந்த சைவசமயிகளது ஐயங் ...வும், சுப்பிரமணியக்கடவுளுக்குச் சரீர ...ம நம்மனோர்க்குள்ள சத்ததாதுக்களா ...ம்போலாகாது; முற்றறிவு, வரம்பிலின் ...யறிவு, தன்வயமுடைமை, குறைவிலாற்ற ...ற்றல் என்னும் ஆறுகுணங்களுமே ஆறு ...ாகவும், மற்றையருட்குணங்கள் மற்றை ...ரகவும் அமையப்பெற்ற அருட்டிருமேனி ...அவருடைய பன்னிரண்டு திருக்கரங்களி ...க்கலங்களாகிய தோமரம், கொம, வாள், குலிசம், அம்பு, அங்குசம், மணி, தாமரை தண்டம், வில், மழு என்னும் பதினொன்றும் பதினொரு உருத்

திரரெனவும், வேல் இப்படியொரு ஆயுதங்களுக்குட
மேலாகிய ஞானசக்தியெனவும், அவருடைய தேவிம
ராகிய தெய்வநாயகி வள்ளிநாயகி யென்னு மிருவரு
அவருக்குக் கிரியாசத்தி இச்சாசத்தி எனவும் சாதி
கின்றதாகிய ஒரு புத்தகத்தை எழுதி, அதற்கு
"சுப்பிரபோதம்" எனப் பெயர்தந்து வெளிப்படுத்
விட்டார். வெளிப்படுத்தியபின்னர் பாதிரிமாரு ந து
ப்போதனைசெய்தலை ஒழித்துக்கொண்டார்கள். ம
றைய சனங்களும் "நாங்கள் ஒருபோதும்
யாதனவும், எங்களுக்கு ஒருவராலுந் தெ
டாதனவுமாயுள்ளவைகளை இப்பொழுதே
மென்றும், சுப்பிரமணியப்பெருமான் இ
ருந்தகையினையுடையர் என்பதனை இப்புத
லாகவே அறிந்தோம்" என்றும் சொல்லிப்
ர்கள். இம்மட்டில் நில்லாது அநேகர் நிய
வேறநேகர் சுக்கிரவாரம், கார்த்திகை, கந்தசட
முதலிய விசேஷதினங்களிலுஞ் சுப்பிரமணியசுவா
தரிசனத்தின்பொருட்டுக் கோயில்களுக்குப் போய்
சுவாமிதரிசனஞ் செய்யத் தலைப்பட்டார்கள். அ
போது அவருக்கு வயசு ௩௧ ஆயிற்று.

தயஙு வித்தியாசாலையிலே, சைவசமய நூல்களை
படிப்பித்துக்கொண்டும், சைவப்பிரசங்கங்களைச் செ
ய்துகொண்டும் வருநாளிலே, பாதிரிமாராலே பி

னுந் சைவசமயதூஷணஞ்செய்யப் படுதலைக்கண்டு, அத்தூஷணங்களை நிராகரித்துச், சைவதூஷணபரிகாரம் என்னும் நூலைச்செய்து ஆனந்த ௵ வெளிப்படுத்தினார். இந்நூலுக்குப், போலிநியாயங்களாலும் பொருந்தாநியாயங்களாலும் ஓர்மறுப்பெழுதி, அதற்கு சுப்பிரதீபம் எனப் பெயர்கொடுத்து, பாதிரிமாருக்குள் வேலையாயிருந்த ஒரு சுதேசகிறிஸ்தவர் * வெளிப்படுத்தினார்.

---

இவர் பாதிரிமாரைவிட்டு அரசாட்சியாரிடத்தே உத்தியோகம் பெறுதற்பொருட்டு, நெடுங்காலமாக அநேகவிண்ணப்பப்பத்திரங்கள்கொடுத்து, அவை சித்திபெறாமைகண்டபின் இந்தியாதேசத்திற்குப் போயினார். அங்கே B. A. பரீக்ஷை கொடுத்து, சிறந்த கவர்ன்மெண்டு உத்தியோகம் பெற்றுச் சிறப்புற்று வாழுநாளிலே, தான் முன் கிறிஸ்துமதத்திலே பிரவேசித்ததை தவறென்றுஞ் சற்சமயமாகிய சைவசமயத்திற்கு விரோதமாகச் சுப்பிரதீபம் எழுதியது குற்றமென்றுங் கண்டு, அவற்றின்பொருட்டுப் பிராயச்சித்தஞ்செய்வித்து, மீட்டுஞ் சைவத்திற்புகுந்து, சைவசமயமே சற்சமயமென்றும், அச்சமயத்தாலுணர்த்தப்படும் சிவன் ஒருவரே பஞ்சகிருத்திய நிருத்தஞ்செய்யும் பிறப்பிறப்பில்லாத பதியென்றும், மற்றைச் சமயக்கடவுளரெல்லாம் பிறப்பிறப்புடையவரென்றும் அறிந்து, அறிந்த உண்மையைக் கிறிஸ்தவர்களுக்கும் பிறருக்கும் போதித்துக் கொண்டிருந்து, சிலகாலத்தின்பின் தேகவியோகமெய்தினர்.

பாதிரிமாராகிய நாங்கள் முயன்றதுபோலவே நாவலரும் முயன்று சைவப்பிரசங்கங்கள் செய்த ரென்றும், அச்சுக்கூடந்தாபித்து நாங்கள் அச்சிட்ட மாதிரியாகப் புத்தகங்கள் அச்சிட்டாரென்றும், அச்சிட்ட புத்தகங்களிலே "பொய் சொல்லாதே" "மாமிசம் புசியாதே" "உன்னை நிந்திக்கிறவனையும் நீ நிந்தியாதே" "பாவஞ்செய்கின்றவன் நரகத்திலே துன்பத்தை யனுபவிப்பான்." "புண்ணியஞ்செய்கின்றவன் சுவர்க்கத்திலே இன்பத்தை யனுபவிப்பான்." என்றற் றொடக்கத்துச் சன்மார்க்க விஷயங்களை எழுதிப் பதிப்பித்தாரென்றும் * றொப்பின்சன் பாதிரியார் (Rev. E. J. Robinson) இங்கிலாந்து தேசத்திலே கஅசுஎ ம் வருடம் (1867) வெளிப்படுத்திய ஹிந்போஸ்டேர்ஷ் (Hindo Pastors) என்னும் புத்தகத்திலே கஉ௫ ம் கஉசு ம் பக்கங்களிலே சொல்லுகின்றார்.

குறைவில்லாத செல்வமாகிய கல்வியைக் குறைவறப்பெற்று எங்கும் புகழ்படைத்து வாழுநாளிலே அநேகர் அவரை இல்லறத்திற் புகல்வேண்டுமென்று வேண்டிக்கொண்டார்கள். அவ் வேண்டுகோளுக்கு இசையாது மறுத்துவிட்டார்.

* இவர் நெடுங்காலமாக இலங்கைத்தீவின் வடபாகமாகிய யாழ்ப்பாணத்திலே உவெஸ்லியன்மிசனெரி (Wesleyan Missionary) மாரில் ஒருவராயிருந்தவர். கிறிஸ்துமதத்தில் மிக்க பத்தியுடையவர். இங்கிலிஷில் அதிசமர்த்தர். எவராலுஞ் சன்மார்க்கரெனப் பாராட்டப்பட்டவர்.

இல்வாழ்க்கையிலே புகாமைக்குக்காரணம் அவர் வெளிப்படுத்திய யாழ்ப்பாணத்து வண்ணார்பண்ணைச் சைவப்பிரகாச வித்தியாசாலையின் ஆவேதனம் நான் காம்பக்கம் பத்தாம்பிரிவிற் கண்டுகொள்க. இல்லறத்திலே புகுதற்குச் சிறிதுஞ் சம்மதமில்லாதவராயிருந்தபடியால், தாஞ் சிவபூசை எழுந்தருளப்பண்ணித் தம்முடைய காலத்தை, முற்கூறியவற்றோடு சிவபூசையிலும் செபதியானாதிகளிலும் போக்கல்வேண்டுமென்ற உள்ளக்கிளர்ச்சியினாலே பூசை எழுந்தருளப் பண்ணிக்கொள்ளும்படி கருதி, தமது யானைக்கருட்சிரேட்டராகிய சதாசிவப்பிள்ளையையுங் கூட்டிக்கொண்டு ஆனந்த ஷூ ஐப்பசிமீ° குறுநாட்டுக்குச்சென்றார். அங்கே சென்று ஆசாரியரை அடைந்து, தாங்களிருவரும் க்ஷணிகலிங்கபூசை எழுந்தருளப் பண்ணிக்கொள்ளவேண்டுமென்றும், அதற்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்தல்வேண்டுமென்றும், விண்ணப்பஞ்செய்தார். இப்படியிருக்க, மற்றைநாட் காலையிலே ஒரு தூரதேசத்தவர் இரண்டு படிகலிங்கங்களுடன் அவர் தங்கியிருக்கும் இடத்திற்குவந்தார். நாவலர் அத் தூரதேசத்தவரைநோக்கி "நீர் இங்கு வருதற்குக் காரணம் யாது" என்று வினவ, அவர், "இந்த ஊரிலே அநேகர்வந்து சிவபூசை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு மீட்டுந் தங்கள் தேசங்களுக்குப் போதலுண்டு. அதுபற்றிச் சிவபூசை எழுந்த

ருளப்பண்ணுங் கருத்துடையாராய்வந்துள்ளார் யாரு க்காவது, இவ்விலிங்கங்களை விற்கலாமென்று சொல் லுவேனோ" என்றார். அந்தச்சமையத்தில் அச் சைவாசாரியரும் அவ்விடத்திற்கு எழுந்தருளிவந்தார் நாவலர் அவைகளைப் பஞ்சசூத்திர விதிப்படி சோதித்தபொழுது, அவைகளிலொன்று குற்றமில்லாததாயும், நான்காம்வருணத்தார் பூசித்தற்குரிய இலக்கணங்களை யுடையதாயுமிருந்தது. பரிசோதித்ததைக் கண்ட சிவாசாரியர் அவரை நோக்கி, "இவைகளெல்லாவற்றையுமறிந்த தாங்கள் உடையவர் பூசை எழுந்தருளப்பண்ணுவிடின், வேறுயாவர் உடையவர் பூசை பண்ணுதற்குத் தகுந்தவர்" என்று சொல்லி உடையவர்பூசையே எழுந்தருளப் பண்ணல் வேண்டுமென்று பலவாறாகக் கேட்டுக்கொண்டார். அவரு தமது காலத்தை நைட்டிகப்பிரமசாரிய ஒழுக்கத்தாற் போக்குதற்கு எண்ணியிருந்தாராதலால் பயமின்றிப் பூசை எழுந்தருளப் பண்ணுதலில் யாதொரு குற்றமு மில்லையென்று கண்டு, தாம் உடையவ பூசையுர், சதாசிவப்பிள்ளை க்ஷணிகலிங்கபூசையும ஆனந்த வருடு ஐப்பசிமீ ௰அ௨ ஆகிய சுபதினத்திலே எழுந்தருளப் பண்ணிக்கொண்டார்கள். அங்கே சில நாளிருந்து பூசை பழகிக்கொண்டு விரைவில் யாழ்ப்பாணத்திற்குத் திரும்பினார். அப்போது அவருக்கு வயசு ௩௨ ஆயிற்று.

இப்படி நிகழுநாளிலே அவருடைய மாணாக்கருட லர் அவரை விட்டு நீங்கி, இல்லறத்திலே புகுந்தார ள். சிலர், யாத்திரைபண்ணவேண்டுமென்னும் விருப த்தினாலே சிதம்பரம் முதலிய தலங்களுக்குப்போயி னார். அவர்களுள் ஒருவராகிய ஆறுமுகப்பிள்ளை, ருவணாமலையாதீனத்துச்சுப்போய், காஷாயம்பெ று, அம்பட்டத்தத் தம்பிரானாய் இப்போதுமிருக்கின ர் இது நிற்க,

...து வித்தியாசாலை எந்நாளும் நிலைபெறும்பொரு ...முதல் ...ாகவேண்டுமென்று நினைந்து, இந்த ...ர சில வருஷங்களுக்குமுன்னே நிருபங்கள் எழுதிப ...பல விடங்களுக்கும் அனுப்பியிருந்தார். கொழு ...பிலேயுள்ள சிரேட்ட பிரபுக்களுள் ஒருவராகிய ...). தனிநாயகமுதலியார் நள ௵ பங்குனிமீ ...ா ரூபா அனுப்பியிருந்தார். அத்தொகையையே ...தலாகவைத்து, பிங்கள ௵ மாசிமீ ௰௪உ புதவா ...தசிராத்திரியிலே (Feb: 1858) அவ்வித்தியாசாலை ...யிலே ஒரு சபைகூட்டி, அதன்வரலாற்றைப் பிரசங்கி ...தார். அப்போது வந்திருந்த பிரபுக்கள் தங்கள் ...ங்களால் இயன்றளவு உபகரித்தார்கள். * அநேக ...ருஷங்களாக வேதனம் பெறாது படிப்பித்துவந்த ...பாத்தியாயர்கள் காலயுத்தி௵ சித்திரைமீ முத ...ாக வேதனம்பெற்றுப் படிப்பித்தார்கள். அவ்வித

* இதைப்பற்றிய வரலாறுமுழுவதையும் வண்ணார்பண்ணை ச சைவப்பிரகாசவித்தியாசாலை ஆவேதனத்திற்காணக.

...ருடடு ஒரு வர்த்தகசாலை வாங்கப்
...டிருக்கின்றது. அப்பொழுது மு. தில்லைநாத
பிள்ளை இவ் வித்தியாசாலையின் முதலுபாத்தியாய
ராக நியமனம்பெற்றார். அப்போது, அவருக்கு வயசு
௩௫ ஆயிற்று.

அவர், தமது வித்தியாசாலையைத் தம்மாணுக்கராகிய கு. ஆறுமுகச்செட்டியாரிடத்திலே ஒப்பித்துவிட்டு, காலயுத்தி௵ ஆனிமீ சென்னபட்டணம்போகப் பிரயாணப்பட்டார். பிரயாணப்பட்டு வேதாரணியம்போய்ச் சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு, அதைவிட்டு நீங்கிப் பலதலங்களையும் வணங்கிக்கொண்டு திருவாவடுதுறையாதீனத்தை அடைந்தார். அவ்வாதீனத்துப் பண்டாரசந்நிதிகளால் உபசரிக்கப்பட்டுச் சிலகாலந் தங்கிப்போகும்படி கேட்டுக் கொள்ளப்பட்டார். அவர்களுடைய கேள்விக்கிசைந்து, அம்மடத்திலே பிரசங்கங்கள் செய்துகொண்டும், புராணங்களுக்குப் பொருள் சொல்லிக்கொண்டும் சிலநாளிருந்தார். அவைகளைப் பண்டாரசந்நிதிகள், சாஸ்திரிகள், வித்துவான்கள், தம்பிரான்கள், ஓதுவார்கள், பிரபுக்கள் முதலிய சமஸ்தருங் கேட்டு இனிது பாராட்டினார்கள். பின் அவ்விடத்தைவிட்டு நீங்கித் தருமபுரஆதீனத்தை அடைந்து, அங்கு சிலநாள் தங்கும்படி பண்டாரசந்நிதியால் கேட்கப்பட்டார். அங்கிருக்குநாளிலே, சை

வப்பிரசங்கங்கள் செய்தலிலே தம்நேரத்தைப் போக்கினார். பின்பு அவ்விடத்தைவிட்டகன்று, வழியிலுள்ள சீர்காழி சிதம்பரம் முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு சென்னபட்டணம்போனார்.

சென்னபட்டணம்போய்ச் சேர்ந்தவுடன் திருவாசகம், திருக்கோவையார் என்னு மிரண்டையும் பரிசோதித்து அவர் மாணாக்கராகிய சதாசிவப்பிள்ளை பேராலே சித்தார்த்தி௵ வைகாசி௴ வெளிப்படுத்தினார். அவ்வருஷத்திற்றானே இவைகளைத்தவிர வேறும் அநேகபுத்தகங்களையும் அச்சிட்டு வெளிப்படுத்தினார். அப்போது அவருக்கு வயசு ௩௭ ஆயிற்று.

கல்வி செல்வம் என்னும் இரண்டினும் மேம்பட்டவரும், வித்துவான்களுக்கு அவரவர் திறமைக்கேற்பச் சம்மானஞ்செய்பவரும், தம்மிடத்துவரும் யாசகர்களுக்கு வரையாதுகொடுக்கும் வள்ளலும், இராமநாதபுரத்து ஜெமிந்தாரின் மானேசருமாயிருந்த பொன்னுச்சாமித்தேவர், அவருடைய கல்வித்திறமையை அவர் பதிப்பித்த புத்தகங்களாலறிந்து, திருவள்ளுவர் பரிமேலழகருரையையும் திருக்கோவையார் நச்சினார்க்கினியருரையையும், தருக்கசங்கிரகம் அன்னம்பட்டீயத்தையும் பரிசோதித்து அச்சிடும்படிக்கும், அதற்குச் செலவு தாமே தருவேமென்றும் வேண்டிக்கொண்டார்.

அவ் வேண்டுகோளின்படி, முந்தியதை ரௌத்திரி ௵ ஐப்பசி ௴ த்திலும், பிந்திய திரண்டையுந் துன்மதி ௵ வைகாசி ௴ த்திலும் வெளிப்படுத்தினார். இந்நூல்களைப் பரிசோதித்து வெளிப்படுத்தியபோது திருவாவடுதுறை யாதீனத்து மகாவித்துவானாகிய திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரபிள்ளை சொல்லிய சிறப்புப் பாயிரத்தின் ஒருபாகம் வருமாறு:—

"நரைசெய்நவப்பயனாகியமைந்தபெருவளப்புதுவைந
தலைமையோன்பொன்
வரைசெய்நிதிப்பெருவாழ்க்கைமாகனவான்பெரும்புலவ
மறவாதென்று
முரைசெய்பெரும் புகழ்ப்பொன்னுச் சாமிநரேந்திரன்ம
துரைப்பக்கேட்டு [௬
நரைசெய்விடையேறுயர்த்தநம்பிரானடிக்கன்பே
நயக்குநல்லோன்.

மன்னுபெருந்தமிழ்ப்பாடையிலக்கணமுமிலக்கியமும
வரம்புகண்டோன்
பன்னுசிவபுராணங்கள்பலதெரிந்தோன்சிவாகமநூற்
பரவைமூழ்கி
யுன்னுமநுபூதியெனும்விலைவரம்பிலாமணிகை
யுறக்கொண்டுள்ளா
னின்னுநயகுணத்தினனாய்ச்சைவமெனும்பயிர்வளர்க்கு
மெழிலிபோல்வான்."

கழ்த்திருக்கேதீச்சரந்திருக்கோணசலமிர்
வாணின்ற
கழ்த்தலம்பொலியாழ்ப்பாணத்துநல்லூர்வாழ்
ராக்கொண்டோன்
புசழுருவமைந்தகந்தவேடவத்துதித்த
ல்வண்யாரும்
கழாறுமுகநாவலனைய்வாறச்சிற்
ப்பித்தானே."

த்தியந்தொல்காப்பியமுன்னயபலவிலக்கணமுஞ்
தியல்பல்விலக்கியமுஞ்சாற்றுபரமதநூலு
மெய்ப்பொருணூலுமதியமையப்பயின்றுணர்ந்து
யனுமனுபூதித்தோன்றலாயமர்பெரியோன்.

பரசமயவழியனைத்துமறமாற்றி
செஞ்சடிலத்தண்ணலாருணெறியே
ம்படிவளர்த்துத்திகழுமாதவமுடையோன்
வனடியார்மேன்மைமுழுமையுமுணர்ந்தோன்.

விரவுதலைக்கழிக்குங்கண்மணியும்வெண்ணீறும்
நள்விரவு மைந்தெழுத்தும் பொருளாகக் கொண்டுவட்
விரவுசுத்தசைவசித்தாந்தப்பெருஞ்செல்வ [போன்
விரவுபரவுபுகழாறுமுகநாவலனே."

"மன்னுகோணசலமாகேதீச்சர
மென்னுமிரண்டுமிரண்டுகண்ணகப்
பெற்றவீழத்திற்பிறங்கும்யாழ்ப்பாணத்
துற்றபல்வழனுக்குறைவிடனகிச்
சொல்லூர்கழனிசூழ்தரக்கொண்டு
செல்லூர்பொழிலாற்சேர்ந்துலகழந்து

வில்லூர்மாடமிகக்கொடிபொலியு
நல்லூர்வாழ்க்கைநயந்தருளறிஞன்
கந்தவேடவத்திற்கருதரன்பான்முன்
வந்தவேளென்னவந்தவதரித்தோ
னீற்றொடுகண்மணிநிறையப்பூண்பாற்
போற்றொடுபொலியும்புண்ணியபுருட
னவநெறியாயவனைத்துங்களைந்து
சிவநெறிவளர்க்குந்திட்பியகுணத்த
னெழுத்துமுதலாகவியம்பிலக்கணமு
வழுத்திலக்கியமும்வரம்புகண்டெழுந்தோ
சமயம்விசேடந்தருநிருவாணமென்
றமையுமுத்தீக்கையுமடைவுறப்பெற்றோன்
சுமங்கலவிசேடச்சுருதியாமூலா
கமங்களின்முப்பொருள்கருதுபேரருளான்
யுத்தியினமைத்துணர்ந்தோங்கனுபூதி
சித்தியுற்றமைந்தசிவசிந்தாமணி
கற்றுணர்புலவருட்களிக்கு
முற்றுணராறுமுகநாவலனே ”

அப்போது திருவாவடுதுறையாதீனத்து மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை மாணாக்கராகிய தி கராசச்செட்டியார் சொல்லிய சிறப்புப்பாயிரத்தி ஒருபாகம் வருமாறு:—

“செந்தமிழென்னுஞ்சுந்தரமங்கை
கரந்தரத்தழகுகளிமங்கலநா
ணிலக்கணமனைத்துநலக்கவிளக்குந்
துலக்கமிகுந்ததுண்டாவிளக்குப்

ஆறுமுகநாவலர்சரித்திரம்.

புணர்தருமின்பமணைவிற்புராண
முணர்வோர்யார்க்குமெளிய நூலாக்கிய
நல்லறிவுறுத்திதொல்பவந்தொலைக்கும்
பல்கலைகட்கெலாம்புல்லுமோரில்லம்
பொய்தெரித்தகற்றிமெய்யிதுவென்னுஞ்
சைவசித்தாந்ததெய்வவைப்புக்
கண்ணுபுண்ணியங்கட்கண்ணியவுயிராந்
தண்ணியமாசிவபுண்ணியப்பிழம்பு
சிவனடியவரைச்சிவமெனமதிக்குந்
தவமதுவளர்க்குமவமறுசீல
னென்னுளங்குடிகொண்டிருக்கு
முன்னுசீராறுமுகநாவலனே."

"தென்மொழியென்னுமன்பெரும்பௌவ
மொருங்குகுடித்தபெருங்கும்பமுனிவ
னொல்காப்பெரும்புகழ்த்தொல்காப்பியமுத
லிலக்கணமெல்லாநலக்கவைத்தடுக்கிய
திருவநீண்டவொருபெரும்பேழை
யாரணம்புகலும்பூரணபுராணனே
பொருளெனப்புகலும்புராணவாகரஞ்
சொல்பலசமயமாந்துகளறவடித்துச்
சமயாதீதமாஞ்சைவசித்தாந்தத்
தெய்வவாரமுதம்பெய்துநிறைத்துப்
பொருவறவைத்தபூரணகும்பம்
பெறுபெரிதடைந்தவாறுமுகநாவலனே."

சிதம்பரத்திலே சைவப்பிரகாசவித்தியாசாலை தாபி
க்கவேண்டுமென்னும் ஆசை மிகுதியினாலே, அந்தத்

காலத்திலே வித்தியாசாலை தாபிக்கமுயன்று, அதை தாபித்தலாலுண்டாகிய பிரயோசனத்தையும், அதை தாபிக்கின்றவர்களும் அதற்குதவி செய்கின்றவருமாகிய இருதிறத்தாரும் அடையும் பலத்தைக் குறித்து, ரௌத்திரி௵ வைகாசி௴ வெளிப்படுத்திய, "தமிழ்நாடெங்கும் சைவசமயம் வளர்ந்தோங்குதற்கு ஏதுவாகச் சிதம்பரஸ்தலத்திலே தாபிக்கப்படுஞ் சைவப்பிரகாச வித்தியாசாலையைக்குறித்து மெய்ப்பொருந்திய சைவசமயிகளுக்கு யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுகநாவலர் எழுதிய விக்கியாபனம் என்னும் பத்திரிகையிலே விரிவாகச் சொல்லியிருக்கின்றார். அவ்வாசை முற்றிற்று என்பதையும், அதனாற் சைவசமயிகள் அடைந்த பிரயோசனத்தையும் வருஞ் சரித்திரத்தினுணர்க.

சைவசமய நூலுணர்ச்சியினுந் தமிழ்க்கல்வியிலுஞ் சிறந்தவரென்று பேர்படைத்து வருங்காலத்திலே சென்னபட்டணத்துக்குச் சமீபமாயிருக்குந் திருமயிலாப்பூரிலுள்ள திருவண்ணாமலை ஆதீனத்துச் சின்னப்பட்டமாகிய ஆறுமுகதேசிகர், நாவலரைத் பார்த்துக்கொள்ளல் வேண்டுமென்னும் ஆசை மிகுதியினாலே அவரிடத்திற்குச் சில ஓதுவார்களையனுப்பித் தம்முடைய திருமடத்திற்கு அழைப்பித்து, அவருடைய இலக்கணவிலக்கியத் திறமையையுஞ் சித்த

புணர்ச்சியையுங் கண்டு, மிகவுஞ் சந்தோஷங்கொ
, தாந் தரித்திருந்த உருத்திராக்ஷசஞ்சியத்தை ஞாப
பொருட்டாக விருக்கட்டுமென்று அவரது மேனி
ல தமது திருக்கரங்களாற் சாத்தியருளினார்.

ன்பு ஆவசியகமாயப்பாணம் வரவேண்டியிரு
டியால் சென்னபட்டணத்தைவிட்டு, பல தலங்க
ம் வணங்கிக்கொண்டு சிதம்பரம்வந்து, சுவாமி
னஞ்செய்து, திருவாவடுதுறையை யடைந்தார்.
கே சிலநாள் தங்கும்படி நேரிட்டது. அங்கிருக்
நாளிலே உபய சந்நிதானங்களும் சித்தாந்த நூல்
லும் இலக்கிய இலக்கணங்களிலும் ஆராய்தலிற்
பூதுபோக்குவாராயினார்கள். அவர்கள், தங்கள்
த்திலேயே இருக்கவேண்டுமென்றும், அவ்வூரிலே
தியாசாலைகள் தாபிக்கவேண்டுமென்றும்,அவரைக
டார்கள். அவர்களுடைய கேள்விக்கிசைந்து
டத்தையே தமக்கு உறைவிடமாக்கிக்கொண்
, தாம் பற்பல விடங்களிலுஞ்சென்று வித்தியா
கள் தாபித்தலும், சைவப்பிரசங்கங்கள் செய்த
, சுயாதீனமாயிருத்தலுமாகிய இவைகளெல்லாவ
ற்குந் தடையாயிருக்குமென்றெண்ணி, அதற்கு
ங்படாது மறுத்துவிட்டார். சிலநாட் சென்
ர் திருவாவடுதுறையைவிட்டு நீங்கி, வழியிலே
ா பல தலங்களையும் வணங்கிக்கொண்டு திருநா
காரோணத்துக்கு வந்து, அவ்வூரவர்களுடைய

வேண்டுகோளின்படி சைவப்பிரசங்கஞ்செய்து, நாட்டகங்கி, அவர்களுக்கு விடைகொடுத்த பின்பு, ( னியேறி, துன்மதி வருஷம் பங்குனிமீ யாழ்ப்பாணம் துசேர்ந்தார். அப்போது, அவருக்கு வயசு ஆயிற்று.

சிதம்பர சைவப்பிரகாசவித்தியாசாலை தாபித்த, மூலதனஞ்சேர்க்கும்பொருட்டு, துந்துபி வருஷம் வை சிமீ உகஉ சனிவாரத்திரவிலே, யாழ்ப்பாணம் வண்ணார்பண்ணைச் சைவப்பிரகாச வித்தியாசா லே ஒரு சபைகூட்டி, மேலே சொல்லப்பட்ட வி யாசாலை தாபித்தலாலுண்டாகும் பயனையும், பிற றையும் விரித்துப் பிரசங்கித்தார். அப்போது விடத்திலே வந்திருந்த சைவசமயப் பிரபுக்கள் கள் தங்களாலியன்ற பொருளுதவிசெய்தார்கள். இ லும் அவ்வருஷம் ஆடிமீ உகஉ சோமவாரத்திர லே, பருத்தித்துறைச் சித்திவிநாயகர்கோயிலிலே, இ விஷயத்தைக்குறித்துப் பிரசங்கித்தார். அங்கே வ திருந்த பிரபுக்களுந் தங்கள் தங்களாலியன்ற பொ ருபகரித்தார்கள். இதுவன்றிப் பருத்தித்துறையிலு புலோலியிலுமுள்ள சில வர்த்தகர்கள், தங்கள் வி பாரத்திலே இவ்வித்தியாசாலையை நடத்தும்பொ ட்டு, மகமை ஏற்படுத்திக் கொடுத்திருந்தார்கள். *

* இவ்வித்தியாசாலையைப்பற்றிய வரலாறு முழுவதைய சிதம்பர சைவப்பிரகாச வித்தியாசாலை ஆவேதனத் திற் கண்டுகொள்க.

)ப்படி நிகழுநாளிலே, சைவசமய பத்தியுடையா :கர், சைவப்பிரகாச வித்தியாசாலையிலே சைவப் ிங்கங்கள் முன்போலச் செய்தல்வேண்டுமென்று, முறை வேண்டிக்கொண்டார்கள். சைவப்பிரசங் ்கள் செய்தலிற்றமே தங்காலத்தைப் போக்கல் ண்டுமென்னுங் கருத்தே அவருள்ளத்திற் குடி ண்டிருந்தமைபற்றி, அவர்கள் வேண்டுகோளுக்கி ந்து, சைவப்பிரசங்கங்கள் செய்துவந்தார்.

ைசவசமயநெறியில் வழுவாதொழுகுஞ் சைவப்பிர கராகிய நாவலர், சமயதீக்ஷை, விசேஷதீக்ஷை, வாணதீக்ஷை, ஆசாரியாபிஷேகம் என்னு மிவை ப் பெற்றுள்ளவர்கள், சிவதீக்ஷையில்லாத வைதி பிராமணர்கையாலே விபூதி வாங்குதலைக்கண்டு, ப சிவாகமவிரோதமென்று துணிந்து, அதனை நீக் கருதி, அவர்களிடத்தே விபூதிவாங்காத ஒரு நியம ுக்கொண்டிருந்தார். ஆகலின், சிவதீக்ஷையுடை ார் அஃதில்லாதாரை வணங்குதலும், அவர்களைச் ரத்தமுதலியவற்றிலே வரித்தலும், அவர்கள் கை லே விபூதி வாங்குதலும், அவர்களைக்கொண்டு ாகமப்பிரகாரங் கட்டப்பட்டுப் பிரதிட்டைசெய் பெற்ற கோயில்களிலே பூசை திருவிழாக்கள் செய் தலும் பிறவுமாகிய இவைகளெல்லாஞ் சிவாகம ிராதமென்பதையும், இப்படிச்செய்வோர் யாதொ

ருபயனையும் அடையமாட்டார் என்பதையும், சு
ஒருபிரகாரஞ் சனங்களுக்குப் பிரசங்கங்களிலே
ல்லிவந்தார். இப்படி நிகழுநாளிலே, வைதிகப்
மணர்களுள்ளே சிலர், தம்மிடத்திலே விபூதி வா
யையினால் அவர்மேற் கோபங்கொண்டு, புறம்பே
ரைத் தூஷித்தார்கள். அம்மட்டினில்லாது சிவ
மானின் திருமேனியாயும், ஆன்மாக்களுக்கு மலத்
க்கெடுத்து ஞானத்தையுதிப்பித்து மோக்ஷத்தைக்
டுக்கும் இயல்பினையுடையவைகளுமாயும், உள்ள
கமங்களையும் நிந்தித்தார்கள். அவர்கள் செய்யும்
தைகளைச் சில பிரபுக்கள் கேட்டு, மேலும்மேலும்
வாறுசெய்யும்படி, அவர்களை ஏவிவிட்டார்கள்.
மைத் தூஷித்தலைப் பொறுப்பினும், சிவாகமநிந்
சிவனடியார்நிந்தைகளை ஒருபோதும் பொறுக்கப
டாத சைவப்பிரசாரகர், துந்துபிவருடம் மாசிமீ
தமது வித்தியாசாலையிலே, வேதம் பொதுநூலெ
றும், ஆகமம் சிறப்புநூலென்றும், வைதிகமார்க்க
லொழுகுவோர் புண்ணியலோகங்களை அடைவ
ரென்றும், சைவமார்க்கத்திலொழுகுவோர் சாலோ
கம், சாமீபம், சாரூபம் என்னும் பதமுத்திகளைப
சாயுச்சியமாகிய பரமுத்தியையும் அடைவார்களெ
றும், அநேக பிரமாணங்களை எடுத்துக் காட்டிப்
சங்கித்தார். அப்பிரசங்கத்துக்கு விரோதமாக
திகப்பிராமணர் சிலர், சில பிரபுக்களையடுத்து, அவ

ப உதவியினாலே வைதிகமார்க்கத்திலொழுகு
ர் உயர்ந்தோரென்றும், அவர்களைச் சைவமா
லொழுகுவோர் வழிபடலாமென்றும், தாங்கள்
த் பூசைசெய்ய விதியிருக்கின்றதென்றும், தாபி
ற்காக வெகு முறைகளிலே சனங்களைக்கூட்டி,
ா பெய்ச்சுப்படியாகப் பொன்மலாங் கொடு
ந்து இங்கிலிசுப் புத்தகங்களைக் கொண்டுவந்து,
திரிலே தாங்கள் சொல்லியவைகளுக்குப் பிர
களுண்டென வாய்ப்பறை யறைந்தார்கள். ஆ
அவர்களிலொருவராவது பிரசித்தசபையிலே
பேசுதற்குச் சத்தியில்லாதவராயிருந்தபடி
தாங்கள் எடுத்தவிஷயத்தைத் தாபித்தற்கு
யில்லாமையாலும், மற்றக்கிழமை இவ்விஷயம
டுமென்று ஒவ்வொருகிழமையினுஞ் சொல்லி
லி, ஒரு கிழமையினும் பேசாது அலைத்துவிட
இவைகளையெல்லாம் அறிந்த சனங்கள்
சொல்வதே நூற் சம்மதமெனவும், தங்களை
வர்களாகிய வைதிகப் பிராமணர் சொல்வது
ந்தமெனவுந் தெளிந்துகொண்டார்கள். தெளி
வைதிகப்பிராமணருக்கு அஞ்சலிவர்த்தனம் பண்
அநேகர் அது செய்யாதுவிட்டார்கள். சிரா
விவாகம் முதலிய கருமங்களிலே அவர்களைத்
த்திரமாகக்கொண்ட அநேகர், கொள்ளாது
கள். வைதிகப்பிராமணரைக்கொண்டு பரா

ர்த்தபூசை செய்வித்த கோயிலதிகாரிகளு அவர்களை நீக்கிச் சிவப்பிராமணரைக்கொண் செய்விக்கத் தொடங்கினார்கள். வைதிகப்பி கையாலே விபூதிவாங்கும் வழக்கத்தையுஞ் தீக்ஷைபெற்ற அநேகர், அவர்கள் கையாலே வாங்காதுவிட்டார்கள். இந்தப்பிரகாரஞ் சி பெற்றோருக்கு மரியாதை நடத்தலையும், சைவர்களாலே வணங்கப்படுதற்கு யோக் டையவரென்று சிவாகமங்களிலே சொல்லப த்தலையும் அறிந்த வைதிகப்பிராமணருள் சிவதீக்ஷைபெற்றுச் சிவபூசை எழுந்தருளப்ப சிவாகமநெறியிலே ஒழுகத்தொடங்கினார்கள் ப்பாணமெங்குஞ் சிவாகம ஆராய்ச்சியும், சி சிறப்பும், தேவார திருவாசக பாராயணமு சிவ பூசைக்கு இன்றியமையாச் சிறப்பின பூசைமணியினோசையும் பரவத்தொடங்கின. சமார்க்கத்திலும் அதிகமாகச் சைவமார்க்கம் தோங்கியது. சைவமார்க்கத்தைப் பரப்புதற் வவதாரஞ்செய்த சைவப்பிரசாரகராகிய ந டைய கீர்த்தி தமிழ்நாடெங்கும் பரம்பிற் வஞ்ஞாத்துவமுள்ள. எமது பிதாவாகிய க மானுடைய கிருபையை என்னென்று செ யார்க்கெடுத்துரைப்பேம்!!! அப்போது, வயசு சுல ஆயிற்று.

த ருத்ரோற்காரி ஹ மார்கழிமீ வித்தியா
யும், வர்த்தகசாலையையும், மு. தில்லைநாதபி
த்தே ஒப்புவித்துவிட்டுச் சென்னபட்டணம்
துப் புறப்பட்டார். அடுத்த தைமாசத்திலே
ாதய புண்ணியகாலஞ் சமீபித்துவந்ததினால்,
ானம் பண்ணிக்கொண்டு போதல் வேண்டு
ம் ஆசைமிகுதியினாலே, இராமேச்சரம்போய்,
ானமும் சுவாமிதரிசனமும் பண்ணிக்கொ
ரிச் சிவராத்திரிக்கு மதுரைக்குப் போகவே
ன்று நினைந்து, அங்குநின்றும் புறப்பட்டு, இரா
த்துக்குப் போயினார். அங்குள்ள திருவாவ
மடத்திலிருந்த விசுவலிங்கத்தம்பிரானுடைய
கோளின்படி அம்மடத்திலிருந்தார். இதற்
வருஷங்களுக்குமுன்னே சென்னபட்டணத்
பொன்னுச்சாமித்தேவர் போயிருந்தபோது,
தும் இவருக்கும் ஒரு விஷயத்தைக்குறித்து
க்கொருவர் மனவருத்தமிருந்தது. இப்படி
த்த மிருந்தபடியால், தேவரைக்காண விருப்ப
ிருந்தார். நாவலர் தமது சமஸ்தானத்து
கின்ற மடத்திலே வந்திருக்கின்றார் என்ப
கள்வியுற்ற பொன்னுச்சாமித்தேவர், ஒருநாள்
டைய சமஸ்தானவித்துவா னொருவரையழை
நாவலர் அவர்கள் நம்முடைய தேசத்திலே
்தும், நம்மைக் காணவில்லையே! எந்த விதத்

வானும் இத்தேசத்துக்கு வந்தால் நம்மைக் விருக்கிறதில்லையே. இஃதென்ன ஆச்சரியம்' சொன்னார். அதற்கு அவர் "நான்போய் கிறேன்" என்றுசொல்லி அவரிடத்திலேவந்து, பல விஷயங்களையும் பேசியபின்பு, அவ க்கி "தாங்கள் தேவரை இன்னும் காணவி என்று கேட்டார். அதற்கு அவர் "தேவரைக் தற்கு எனக்கு இட்டமில்லை" என்றார். "தேவரைக் காணுதற்குத் தங்களுக்கு இட் யாயினும் இத்தேசத்துக்கு வந்திருக்கிறபடி ப டுகொண்டு போகாமலே தகுதி" என்று போய்விட்டார். போய், "நாவலர் தங்களைக் காணுதற்குச் சற்றும் பிரியமில்லா யிருக்கின்றார்கள்" என்று சொன்னார். தேவ ரை நோக்கி, "நீர் எந்தவிதமும் நாவலர் அவ வரும்படி செய்தல்வேண்டும்; நம்முடைய தே க்கு வந்திருந்தும் நம்மைக் காணாது போவா யானால் நமக்கு அவமானமாகுமே" என்று செ பின்னும் மற்றை நாள் அவரிடத்திற்கு அவ ப்பிவைத்தார். அனுப்பப்பட்டவர் அவரிட வந்து, அவரை நோக்கி, "எந்த வித்துவா பிரபுவாவது, இந்தச் சமஸ்தானத்துக்கு வந்தா வர் அவர்களைக் கண்டுபோதல் நெடுங்காலமா வழக்கம்; அப்படியிருக்கத் தாங்கள் தேவர

ணை விருப்பமில்லையென்று சொல்லுதல், நம
திசயத்தைத் விளைக்கின்றது. மேலும் தேவர
க் காணுது போதல் வித்துவானுயிருக்குந் தங்
முறையல்லவே" என்று சொன்னார். அவர்,
குத்தரமாக "ஒருவரைக் காண விருப்பமில்
ன்னைக்காணும்படி சொல்லுதல் உமக்குப் புதி
. இன்னும் பிரியமில்லாத ஒன்றைச் செய்
க்கு வழக்கமுமன்று" என்று சொல்லி, அவ
புபியிட்டார். அவர், தேவரிடத்திற போய்,
ாக் காணவேண்டுமென்று நான் பலவாறாக
ர் அவர்களுக்குச் சொன்னேன்; சொல்லியும்
ர சம்மதித்தார்களில்லை" என்று சொன்னார்.
தேவர் அவரை நோக்கி "நீர் இன்னுமொரு
போய்ப் பார்த்துவாரும்" என்றார். அவர் மற்றை
ளையில் அவரிடத்திலே வந்து பண்ணிய சம்
பினால், தேவரைக்காணுதற்கு அவருக்கு ஒரு
கருத்தில்லையெனக் கண்டார். காணவே,
வருடைய ஆண்டன்மை, வீரம், துணிபு முத
ளை யறியாதவராதலால், பொன்னுச்சாமித்
டைய அதிகாரத்தையும், அவர் அவ்வதிகாரத்
வளவு பிறர்மேற் செலுத்தக் கூடியவரென்ப
அவரைப் பகைத்துக்கொண்டு அச்சமஸ்தா
விட்டு நீங்குதல் அரிதென்பதையும், இன்னு
பயனற்ற சொற்களையுஞ் சொன்னார். அவர்

தேவருடைய அதிகாரம், செல்வாக்கு முத
களை எனக்குச் சொல்லுதலினால் நான் அ
க்குப் பயந்து அவரைக் காணுதற்கு உட
னென்று நினைந்து, இவரெனக்குச் சொல்லு
இவருடைய சொற்களுக்குப் பயந்து அவரை
தற்கு உடன்படுவேனாயின், நான் எடுத்துக்
நன்முயற்சிகளையும் இன்னோரன்னோர்க்கஞ்சி
நெகிழவிட நேரிடுமே. அவ்வாறாயின் அ
ற்சிகளை என்மனத்தோடுபொருந்தச் சிவபெ
டைய திருவருள்வழிநின்று, அவ்வருளையே
கொண்டு செய்யத்தொடங்கினேனல்லன
வங்களுக்கு மாளாவேனெயென்று நடக்கு
ந்து, பொன்னுச்சாமித்தேவருடைய குறை
அவராலும் அவரைச்சார்ந்தோர்களாலும்
த்தார் படிபடர்களையும் வெளிதிறந்து, அவர்
யிற்பேசிக் கண்டித்து, அவரை யனுப்பிவிட்ட
போய் இங்கே நடந்த சமாசாரமுழுவதையு
க்குத் தெரிவித்து, "இந்தப்பிரகாரமாகத்
டைய சமஸ்தானத்திலே ஒருகாலத்திலும் ஒ
பேசத்துணியவில்லை; அப்படியிருக்கத் தங்கள
ரோதமாகப் பேசத்துணிந்தமை ஆச்சரியத்
க்கின்றது. ஆதலால், தங்கள் அதிகாரத்தை
க்குக் காட்டிவிடுதலே தகுதி" என்றார். அ
அவர் உத்தரமாக "நாவலர் அவர்கள் இத்

ருந்தும், நம்மைக் காணவில்லையே யென்றுத
ர்களுக்கு நாம் விரோதஞ்செய்யத் தலைப்படு
ர, எங்களுக்கு அவர்களால் சம்பவிக்கும்
பல. எப்படியெனின், நாவலர் அவர்கள்
படித்தவர்களா யிருத்தலானும், சென்னைப
ிலுள்ள உத்தியோகத்தர்கள் பிரபுக்களா
கள் அவர்களுக்கு இட்டர்களும் சிஷர்களு
கலானும், நாம் அவர்களைப் பகைத்துக்கொ
பின் நமக்கும் நடது இராச்சியத்திற்குந் தீங்
ம். அல்லாமலும், தற்காலத்து வித்துவான்
ரளே, அவர்கள சிறந்தவித்துவானும் பிரபுவு
மென்றார்கள். அன்றியும் திருவாவடுதுறை
ஆதீனங்களிலேயுள்ள பண்டாரசந்நிதிகளால்
விலக்கியங்களிலும், சைவசித்தாந்தத்திலும்
ந்தவர்களென்றும், சமயவிஷயங்களையாவது
த விஷயங்களையாவது தருக்க சம்பிரதாயத்
ிரசங்கித்தலில் மிகச் சிறந்தவர்களென்றும்
திக்கப்பட்டிருக்கின்றார்கள். இத் தமிழ்நா
ள மற்றை வித்துவான்கள் நம்மிடத்திலே
ம் வாங்குதற்கும், நம்மால் மதிக்கப்படுதற்
ராசையுடையராய் நம்முடையதானத்துக்கு
ருகின்றார்கள். அங்ஙனமாக, நாவலரவ
ம்மிடத்திலே சம்மானம் பெறுதற்காவது,
ப தயவைப் பெறுதற்காவது, நம்மாலே வித்

தாவாரென்ன் றழைக்கப்படுதற்காவது, விருப்ப
யர்களா யிருக்கவில்லையே. ஆதலால், அவர்க
ளையுஞ் சிநேகமும் நமக்கு வேண்டுமாயின்,
களை நாமாக வலிந்து நமது தானத்திற்கு அழை
கொள்ளுதலே புத்தி" என்று சொன்னார்.
யெபினபு அவரைத் தமது அவைக்களத்துக்கு
செய்தற்கு ஒருபாயத்தை ஆலோசித்து, சில
ாவ் சாஸ்திரிகளை யழைத்து அவர்களைக்கொ
"நாங்கள் சைவசமயமே மெய்ச்சமயமென்று
கங்கள் செய்து வருகின்றீர்களென்று நாங்கள்
வியுற்றேம். தாங்கள், பிரபு அவர்களுடைய
க்களத்திலேவந்து சைவசமயமே மெய்ச்சமயமே
தாபிப்பீர்களாயின், அதனை மறுத்து, விட்டுனு
மே மெய்ச்சமயமென்று தாபிப்போம்." என்ப
லிய பொருள்களை உள்ளடக்கிய கடிதமொ
எழுதுவித்து அனுப்புவித்தார். அக்கடிதப்
டனே, "எழுத்துச் சொற்பிழைகளில்லாமற்
மெழுதத்தானும் தெரியாத நீங்கள்தாமா, சமய
செய்யத் துணிந்திர்கள்? உங்கள் துணிவிருந்த
நன்று! நன்று" என்று பரிகாசஞ்செய்து அனு
ட்டார். தேவர், தம்முடைய ஆலோசனைக
றேனும் சித்திபெறுமையைக் கண்டு, பசுக்க ன்
யைவிட்டுப் பிரிந்தாலும், தாயானது தனதுக ன்
குமிடந் தேடி, அதைச்சென்றணைந்து, அதற்கு

ன்போடும் பாலைச்சுரந்து கொடுத்தல்போல, தாங்க ளும் நாமறியாது தங்களுக்குச் செய்திருக்குங் குற்ற ங்களைப்பொறுத்து, இது கண்டவுடன் எழுந்தருளிவ ரல் வேண்டும் என்னும் பொருளை உள்ளடக்கிய ஒரு கவியைப்பாடி, பின்னுந் தம்முடைய வித்துவானிடத் திற்கொடுத்து, அனுப்பிவைத்தார். அனுப்பப்பட்டு வந்தவர், மிகுந்த பணிவோடும் அச்சீட்டுக்கவியை அவருக்குக்கொடுத்தார். அவரதை வாசித்த பின்பு, நம்மை யொருவர் பலவாறு வலிந்து அழைக்க, நாம் போகாதிருத்தல் சிறப்பன்று என்று தமது உள்ளத் தில் நினைந்து, பின்வருங் கட்டுப்பாடுகளைப் பண்ணி க்கொண்டு தேவரிடத்திற்குப் போதற்குச் சித்தங் கொண்டார். அக் கட்டுப்பாடுகளாவன:—அங்கவஸ் திரந் தரித்துக்கொண்டும், பாதகுறடிட்டுக்கொண்டும், தம்மோடு கூடப்போகும் எல்லாரோடும், அரமனை யிற்சேறல்; தேவரிடத்திலே பரிசுபெறாது விடுதல்; தேவர் எழும்பொழுதெல்லாம் எழாதிருத்தல் முத லியவைகளே. பின்பு, தாமிருந்த மடத்தைவிட்டு நீங் கித் தமது பரிசனங்களோடும் அரமனைக்குச்சென் றார். நாவலர் அவர்கள் வருவார்களென்று எதிர் பார்த்திருந்த தேவர், அவரைக்கண்ட உடனே எதிர் கொண்டழைத்து, ஆசனத்திருத்தி, அவரோடு கல்வி விஷயங்கள் பலவற்றைப் பேசியபின்பு பிரசங்கிக்கு

மாறு வேண்டிக்கொண்டார். அவ்வேண்டுகோளுக்கிசைந்து, "சைவசமயமே சமயம் சமயாதீதப் பழம்பொருளை" என்னும் தாயுமானசுவாமிபாடற் செய்யுளையேபீடிகையாக எடுத்துக்கொண்டு, சிவனொருவரே பிறப்பிறப்பில்லாத கடவுளென்றும, அவரை வழிபடுவோர் அனுசரிக்குஞ் சமயமாகிய சைவசமயமே மெய்ச்சமயமென்றும், விட்டுணுமதத்தை அநேக பிரமாண நியாயங்களாலே கண்டித்துப், அவ்வைணவசாஸ்திரிகள் முன்னிலையில் பிரசங்கித்தார். தேவர் அப்பிரசங்கத்தை மிகப் புகழ்ந்து. ஒருகாலத்தும் ஒரு வித்துவானும் பெறாதனவும், ஒரு வித்துவானுக்குங் கொடாதனவுமாகிய இரண்டுசாதரானவயமைப்பித்து, அவைகளை ஏற்றுக்கொள்ளுமாறு பலவாறாக வேண்டிக்கொண்டார். இது முனமேன தாஞ் செய்துகொண்ட கட்டுப்பாட்டுக்கு விரோதமானதென்று மறுத்தும், தேவருடைய ஆராமையையும் அன்பையுங் கண்டு ஏற்றுக்கொள்ளச் சம்மதித்தபின்பு, தேவர் அவைகளைத் தமது கைகளாலெடுத்து அவருடைய மேனியிற் சாத்திவிட்டார். அதன்பின்பு தேவர், ஏட்டுப்பிரதிகளிலுள்ள கடினமான நூல்களைத் தாங்கள் பரிசோதித்து உலகத்திற்குப் பயன்படும்பொருட்டு அச்சிட்டு வெளிப்படுத்தல் வேண்டுமென்றும், அதற்குத் தம்மாலாய உதவிகளைக் காலந்தோறுஞ் செய்வேமென்றும், வாக்குக்கொடுத்தார். பின்பு, அவரும் அவரோடுகூடச்

ன்றவர்களும் அரமனையைவிட்டு நீங்கி மடத்துக் போனார்கள். மற்றநாள் திருவுத்தரகோசமங்கை ப்போய்ச் சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு மீட் அம்மடத்திலே வசித்திருந்தார். பின் அவ்விடத் விட்டுப் புறப்பட்டு மதுரைக்குப்போயினர். அப் ாது அவருக்கு வயசு ௪௧ ஆயிற்று.

மதுரையிலுள்ள திருஞானசம்பந்தசுவாமிகள் ஆதீ ந்தப் பண்டாரசந்நிதிகளும் மற்றைச் சைவப்பிரபு ளும் கேட்டுக்கொண்டபடி அந்தத்தலத்திலே சில ர் தங்கியிருக்கும்பொழுது, கோயிலுக்குநியமமாகப் ாய்ச் சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு வருவார். படி யிருக்குநாளிலே, பண்டாரசந்நிதிகள் கேட்டு காண்டபடி, மீனாட்சி அம்மை சந்நிதானத்திலே, தத்தலத்தின் பெருமையையும், அதிலெழுந்தருளி ுக்குஞ் சொக்கலிங்கமூர்த்தியுடைய பெருமையை , சைவசித்தாந்தத்தினுடையஉயர்வையும்விரித்து, ங்களுக்கு இனிது விளங்கும்படி பிரசங்கித்தார். -னே கோயிலருச்சகர், அம்மைக்குச் சாத்தியவிபூ பிரசாதமும், பரிவட்டமும், புட்பமாலையுங்கொண் ந்து, விபூதிப்பிரசாதத்தை சைவப்பிரசாரகருடை கயிற் கொடுத்து, பரிவட்டத்தைச் சிரசிலேகட்டி, லையைத்தோளிலிட்டு ஆசீர்வதித்தார். பின்கோயிலி ன்றுவாத்தியமுதலிய வரிசைகளோடு மடத்துக்கு ரப்பப்பட்டார். அச்சனங்கள் இப்படிப்பட்ட பிரச

ங்கத்தை முன்னொருகாலத்துங் கேட்டிராதபடியால், பிரசங்கத்திலாராமையையும், அவரிலன்பும்வைத்தார்கள். இன்னும் சிலநாட்சென்றபின் தங்களையடத்திலே பிரசங்கஞ்செய்வித்தார்கள். பிரசங்கம் முடிந்தவுடன் மகாசந்நிதானம் சந்தோஷங்கொண்டு தமது திருச்செவிகளில் அணிந்திருந்த சுந்தரவேடங்களைக் கழற்றி நாவலருடைய செவிகளிலணிய, அதுகண்ட சின்னச் சந்நிதானம் தாம் அணிந்திருந்த ஆறுகட்டிகளைக் கழற்றி அவ்வாறுசெய்ய, உபயசந்நிதானங்களும் பிரசங்கத்தை இனிது பாராட்டி வரிசையோடு அநுப்பிவிட்டார்கள். சின்னச்சந்நிதானம் இலக்கணக்கொத்திலுள்ள சந்தேகங்களைக் கேட்டு நிவிர்த்திபண்ணிக்கொண்டார். அங்கிருக்கும்பொழுது திருப்பூவணம், திருவேடகம் முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு திருப்பரங்குன்றத்திற்குப்போய், அந்தத்தலத்திலிருக்கின்ற சுப்பிரமணியப்பெருமானை வணங்கிச் சிலநா ளங்கிருந்து, மீட்டும் மதுரைக்குவந்தார். பின் உபயசந்நிதானங்களிடத்திலே அநுமதிபெற்றுக்கொண்டு பிரயாணப்பட்டு வரும்போது, வழியிலேயுள்ள திருப்புத்தூர் என்னுந் தலத்தை வணங்கிக்கொண்டு, மயூரகிரியென்று ஆன்றோராற்கூறப்பட்ட குன்றக்குடிக்குவந்தார். திருவண்ணாமலையாதீனம் இந்தத் தலத்திலே ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றது. இவ்வாதீனத்துப் பண்டாரசந்நிதிகள், தமது திருமடத்திலே சிலநாளி

ந்து போகும்படி கேட்டுக்கொண்டார்கள். அங்கிரு நாளிலே, அவருடைய காலம் சித்தாந்தவிஷயத்தி பண்டாரசந்நிதிகள் செய்யும் ஆட்சேபங்களுக் சமாதானஞ் சொல்லுதலிற் போக்கப்பட்டது. நாள் சைவசித்தாந்தத்தினது உயர்வையும், அதன் நி ஒழுகுவோர் எய்தும் பயனையுங் குறித்து, அத் நமடத்திலே பிரசங்கிக்கும்படி பண்டாரசந்நிதிக ால் கேட்கப்பட்டுப் பிரசங்கஞ்செய்தார். அப் பாது பண்டாரசந்நிதிகள், சாஸ்திரிகள், தம்பிரான் ர், சைவப்பிரபுக்கள், ஓதுவார்கள் முதலிய எந்தி ந்தவருநுகிரத்தையோடு வந்திருந்து கேட்டார்கள். ரசங்கஞ்செய்து முடிந்தபின், வேறுமடத்துப் பண் ாரசந்நிதிகள் தானும் அத்திருமடத்து வீதிவழியே ல்லக்கு ஏறிககொண்டுபோனால், தமது கட்டுப்பாடு ழிந்துபோமென்று அதற்கிடங்கொடாத பண்டார ந்நிதிகள். பல்லக்கொன்று திட்டப்படுத்தி, சித்தா த சைவப்பிரவர்த்தகராகிய **நாவலரை** அதின்மே லற்றி, தம்பிரான்கள், ஓதுவார்கள், சாஸ்திரிகள் முதலானவர்கள் சூழ்ந்து செல்ல, கட்டியத்தடி, வா ளுத்தடி, கோணத்தடி, வெள்ளிக்கைப்பந்தி முதலிய விருதுகளும், பெரிய மேளம் முதலிய வாத்தியங்க ளும் முன் செல்ல, பட்டணப்பிரவேசஞ் செய்வித்தா ர்கள். பின்னும் சிலநாள் மடத்திலேயிருந்து, பண் டார சந்நிதிகளிடத்திலே விடைபெற்றுக்கொண்டு

திருப்பெருந்துறைக்குப்போனார். அங்குள்ள திருவாவடுதுறை ஆதீனமடத்திலிருந்த கட்டளைத்தம்பிரானால் உபசரிக்கப்பட்டு, அம்மடத்திலேயிருந்து, காலந்தோறுஞ் சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு வந்தார். இங்ஙனம் நிகழுநாளிலே, இராமநாதபுரம் இராமசுவாமிப்பிள்ளை திருவிளையாடற்புராணத்திலும், வண்ணாண்டச்செட்டியார் நன்னூல் விருத்தியுரையிலுந் தங்களுக்குள்ள சந்தேகங்களைக் கேட்டு,நிவிர்த்திபண்ணிக்கொண்டார்கள். அவ்விடத்தைவிட்டு நீங்கித்தொண்டைமான் புதுக்கோட்டைக்குப்போனார்.

அங்கிருக்கும்போது நாட்டுக்கோட்டைவர்த்தகர்களால் குடுங்குடிக்கும்பாபிஷேகத்தின்பொருட்டழைக்கப்பட்டு அரிமளத்தில்வந்திருந்தபோது, அங்குள்ள ஆலயத்திலே சைவப்பிரசங்கஞ்செய்யும்படி அவர்கள் பிரார்த்தித்துக்கொண்டார்கள். அவர்கள் பிரார்த்தனைக்கிசைந்து, அங்கேபோய்ச் சிவபெருமானுடைய மகிமைகளையும், அவரை வழிபடுவோர் தரிக்குஞ் சிவசின்னங்களின் வரலாறுகளையும் விரித்துப்பேசி, முடிவிலே அச்சின்னங்களைத் தரிப்பவர்கள் மாமிசபோசனமில்லாதவரா யிருத்தல்வேண்டுமென்று பிரசங்கித்தார். அப் பிரசங்கத்தைக் கேட்டமாத்திரத்தே அநேகர் தங்கள் வீடுகளுக்குப்போனவுடன் மாமிசம் பாகம் பண்ணும் பாத்திரங்களை உடைத்துவிட்டு, அன்று

ரடக்கம் மாமிசபோசனத்தை விடுத்தார்கள். பின்
டுங்குடிசென்று சுவாமிதரிசனஞ்செய்து பிரசங்க
ண்ணி மீட்டும் புதுக்கோட்டைக்குவந்து, அங்கு
ரறும் புறப்பட்டு திரிசிராப்பள்ளி, திருவானைக்கா,
ஞ்சாவூர் முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு கும்
'காணம்வந்தார். அங்கே சுவாமிதரிசனஞ் செய்து
ரண்டிருக்குநாளிலே, திருக்கேச்சரத்துக்குப்போ
சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு மீட்டும் கும்ப
ரணத்தில்வந்திருந்தார்.

நாவலர் கும்பகோணம் வந்திருக்கிறார் என்ப
தக் கேள்வியுற்ற திருவாவடுதுறை யாதீனத்துப்
ண்டாரசந்நிதிகள், வித்துவான்களிற் சிறந்தவரே
று தமிழ்நாடெங்கும் புகழ்படைத்தவரும், தேவா
:பெற்ற அநேகஸ்தலங்களுக்குப் புராணஞ்செய்த
கர வித்துவானுமாகிய மீனாட்சிசுந்தரம்பிள்ளையை
ம்,சில ஓதுவார்களையும்,அவரை மடத்துக்கழைத்து
கொண்டுவரும்படி, அனுப்பிவைத்தார்கள். அனுப
ப்பட்டு வந்தவர்களால் அழைக்கப்பட்டு மடத்திற
)சென்று அங்கிருக்குநாளிலே, பிரசங்கங்கள் செ
துகொண்டும், சித்தாந்தநூல்களிலும், இலக்கண
)லக்கியங்களிலும் அவர்களுக்கு உள்ள சந்தேகங்
ளைத் தீர்த்தும் வந்தார். சந்தேகநிவிர்த்தி பெற்றவர்

களுள் ஒருவரான நமசிவாயதம்பிரான் முன் சென்னபட்டணத்திலும் போயிருந்து சிலகாலம் அவரிடத்திலே பாடங்கேட்டவர். இப்போது அவர் மேற்படி ஆதீனத்து இரண்டாம்பட்டமாயிருக்கிறார்.

அத் திருவாவடுதுறையைவிட்டு நீங்கிப்புள்ளிருக்குவேளூர்சென்று, சுவாமியை வணங்கிக்கொண்டு புறப்பட்டு, பரசமயகோளரியாகிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருவவதாரஞ்செய்தருளிய சீகாழியின் எல்லையை அடைந்தமாத்திரத்தே கைகளைச் சிரசின் மீது குவித்து அந்தத் திருப்பதியை வணங்கி, பின்பு திருக்கோயிலினுள்ளே போய், அங் கெழுந்தருளியிருக்குந் தோணியப்பரையும், பெரியநாயகியம்மையையுந் தரிசித்துக்கொண்டு, சிதம்பரத்துக்குப் புறப்பட்டார். சிதம்பரம்வந்து சேர்ந்தவுடன். சிலமாசங்களுக்கு முன்னே பேலைவீதியிலே விலைக்கு வாங்கப்பட்டிருந்த நிலத்திலே, இரத்தாட்சி௵ ஆவணி௴ ௯௨ ஒரு வித்தியாசாலைகட்ட ஆரம்பித்து, அடுத்த புரட்டாசிமாசத்திலே நிறைவேற்றினார். அவ்வித்தியாசாலைக் கட்டடத்துக்கு வேண்டிய மரங்களெல்லாந் தச்சுவேலை முற்றமுடிப்பித்து இணுவில் வேங்கடாசலையராலே கொடுக்கப்பட்டன.

அங்கே ஐப்பசிமீ உஅஉ சுக்கிரவாரமும் சுக்கில
ஷத்திரயோதசிதிதியும், ரேவதிநக்ஷத்திரமுங்கூடி
சுபதினத்திலே, விருச்சிகலக்கினத்திலே, "சிதம
சைவப்பிரகாசவித்தியாசாலை" எனப் பெயர்கொ
— பள் ... தாபித்தார். தில்லைவாழந்த
ர்கள், பூசகர்களர்கள், சைவாசாரியர்கள
ரலிய யாவருந் தங்கள் தங்கள் பிள்ளைகளைக் கல்வி
றற்கு இவ்வித்தியாசாலைக்கு அனுப்பினார்கள். இவ
ித்தியாசாலையிலே கருவிநூல்கள் மாத்திர மன்றிச்
யநூல்களும் படிப்பிக்கப்படுகிறபடியால், சைவச
ிகள் யாவரும் வித்தியாசாலையில்மதிப்பும், அதன்
பகர்மேல் அன்புவைத்தார்கள். திருவாவடுது
யாதீனம், தருமபுரவாதீனம், திருவண்ணாமலையா
ம் முதலிய வாதீனத்துப் பண்டாரசந்நிதிகளும்,
றையவிடங்களிலுள்ள சைவப்பிரபுக்களும், சிதம்
தரிசனத்தின்பொருட்டு வரும்போதெல்லாம் வித
ாசாலைக்குவந்து, பிள்ளைகளைப் பரீக்ஷைசெய்து, சம
தர் எனக் காணப்பட்ட பிள்ளைகளுக்கு விலையேறப்
ற்ற புத்தகங்களைப் பரிசாகக்கொடுத்து, வித்தியா
லையிலொழுங்கையும், அதிலே படிப்பிக்கும் உபாத
ாயர்களின் திறமைகளையும், அதனைத் தாபித்தவரு
-ய நன்முயற்சிகளையும் பற்றி, வித்தியாசாலையிற்று
ர பலசனங்களெதிரே பாராட்டி வியந்து பேசிப்
-ாவர்கள். இவ்வித்தியாசாலைக் கட்டடமுதலியவை

களைச் சிரத்தையோடுயே நடத்திவந்தவர், சிதம்பரவாசத்தின்பொருட்டு இதற்கு ஏறக்குறைய ௨௰-வருஷத்துக்குமுன்னே யாழ்ப்பாணத்தினின்றும் போயிருந்த காசிநாதபிள்ளை. *

அம்மாசத்திலே சுவாமி தரிசனத்தின்பொருட்டு திருநாகைக்காரோணத்திற்குப் போயிருந்த பொழுது, நாட்டுக்கோட்டை வர்த்தகர்கள் சிலர், அவரைச் சிரத்தையோடும் உபசரித்து, சிதம்பர வித்தியாசாலைக்குத் தங்களாலியன்ற பொருளுதவி செய்தார்கள். அதைவிட்டகன்று, அவருடைய சிஷ்யர்களுள் ஒருவராகிய கா. வேலுப்பிள்ளையால் அழைக்கப்பட்டு திருவேட்டக்குடிக்குப்போய், சுவாமிதரிசனஞ்

* இவர் யாழ்ப்பாணத்தைச்சார்ந்த பச்சிலைப்பற்றுமணியகாரனின் புத்திரர். விவாகஞ்செய்த சிலகாலத்தால் மனைவியிறக்கக்கண்டு, பிரபஞ்சவாழ்விலே அமிழ்ந்திக்கிடத்தல் புத்தியன்றென்றுகருதி, சிதம்பரம்போய், சிவபூசை எழுந்தருளப்பண்ணி, மந்திரக்கிரியாபாவனையுடன் பத்தியாய்ச் சிவபூசைபண்ணிக்கொண்டும், திரிகாலத்திலும் நியமமாக சுவாமிதரிசனஞ் செய்துகொண்டும், சுவாமிக்குப்பூமாலை கட்டிக்கொடுத்தல் முதலியதிருத்தொண்டுகளைச் செய்துகொண்டும் வந்தவர். இப்படியிருக்குங்காலத்திலே, **நாவலர்** வித்தியாசாலைதாபிக்கும்பொருட்டு சிதம்பரம்வந்தபோது, அங்கே இவருடைய சிவபத்தியைக்கண்டு, வித்தியாசாலைக்கட்டடத்தை நடத்தும்பொருட்டு இவரிடத்திலே பணத்தை ஒப்பித்து,விரைவில் முடிக்கும்படி கற்பித்தார். அத

ரதுகொண்டு தம்மோடுகூடச் சென்றவர்களுக்கு டகொடுத்த பின்பு, அந்தத்தலத்தைவிட்டு நீங்கித் க்கூடலூர்சென்று, அங்குஞ் சுவாமிதரிசனஞ்செய்து ண்டு மீட்டும் சிதம்பரத்துக்குவந்தார்.

தம்பராலய பூசகர்களுள்ளே சிலர், சிவாகமங் நிந்தித்து, அவைகளிற்கூறப்படுந் தீக்ஷைகளி யாதொருபயனில்லையென்றும், அக்கருத்துப்ப ைய நாங்கள் அவைகளைப் பிரமாணமெனக்கொ ாதும் தீக்ஷைகளைப்பெறுதும் இருக்கின்றோமெ ம், சிதம்பராலயகிரியைகள் முழுதும் வைதிககி ரியைகளே யென்றுஞ் சொல்லிக்கொண்டு திரிந்தார்

---

களை எற்றச் சிரத்தையோடும் விரைவிலேநடத்திமுடித் தமைகண்டு, சிதம்பரம்விட்டுச் சென்னபட்டணம்போ கும்போது, அவரை யவ்வித்தியாசாலைக்கு அத்தியட்ச ராக நியமித்துவிட்டுப்போனார். சிதம்பரத்திலே வெகு காலம் வாசஞ்செய்தவராதலானும், சிவபத்தியிற்சிறந் தவராதலானும், யாவரையும் வசீகரிக்கத்தக்க நற்கு ணமிருந்தமையானும், வித்தியாசாலையின் உபாத்தியா யர்களும் பிள்ளைகளும் அவருடைய கட்டளைகட் கமை ந்து நடந்தார்கள். **நாவலர்** சுக்கிலவருஷ யாழ்ப்பாணம் வரும்போது அவருடன் கூடிக்கொண்டுவந்து, அவரு டையவிடத்திலே அவருக்கு அநேக உதவிகளைச் செய்து கொண்டிருக்குங்காலத்திலே, சுரத்தாற்பீடிக்கப்பட்டு ஆறுநாட் சுகவீனமாயிருந்து, பிரமாதிவருஷ வைகாசிமீ சிவபதமடைந்தார். அவருடைய அபரக்கிரியைகள் யாவும் **நாவலரால்** சிறப்பாக நடப்பிக்கப்பட்டன.

கள். அசேதனதிலகர்களாகிய சிலர் இவர்களுடைய சொல்லையே மெய்யென நம்பியிருந்தார்கள். அக்கிந்தைகளைக்கண்டுங்கேள்விப்பட்டு மறிந்தமாத்திரத்தே சிவாகம நிந்தைசெய்வோரைக் கண்டித்தலே அவைகளையருளிச்செய்த சிவபிரானுடையகட்டளையென்று தெளிந்து, அப்பூசகர்கள் அநுட்டிக்கும் வைதிகக்கிரியைகளைச் சொல்லும் வேதம் பொதுநூலென்றும், முத்தியின்பத்தைக் கொடுக்கமாட்டாதென்றும், அவர்கள் நிந்திக்கின்ற சிவதீக்ஷைகளைப்பற்றிப் பேசுஞ்சிவாகமமே சிறப்புநூலென்றும், அதுவே பதிபசுபாசமென்னுந் திரிபதார்த்தலட்சணங்களைப்பற்றிச் சொல்வதென்றும், பரார்த்தபூசைக்கு விதிகள் அதிற்றானே சொல்லப்பட்டிருக்கின்றனவென்றும், அச்சிவாகமத்திற் பேசப்படுகின்றனவாகிய தீக்ஷைகளே எத்தீக்ஷையினுஞ் சிறந்தவையென்றும், அவைகளே பாசம் மூன்றையுந் தவிர்ப்பனவென்றும், சிதம்பராலயக்கிரியைகளின்பொருட்டு ஆதிகாலத்திலே தில்லைவனத்திலே சிவபெருமான் தமது அருட்சத்தியாகிய சிவகாமியம்மையார் காணத் திருநிருத்தஞ்செய்யத் தரிசிக்கப்பெற்றவராகிய பதஞ்சலிமகாமுனிவர் சிவாகம முறைப்படி ஒருபத்ததி செய்தருளினாரென்றும், ஆதியிலேயிருந்த தில்லைவாழந்தணர்கள் சிவதீக்ஷைகளைப்பெற்றிருந்தார்களென்றும், இப்போதுள்ளவர்கள் சிவாகம அறிவுஞ் சிவதீக்ஷையுமில்லாது பூசைசெ

சிவாகமத்துக்குஞ் சிவாகமத்தைத் சிரமேற்கொ முனிவர்களுடைய அனுஷ்டானத்துக்கும் வி மென்றும், மார்கழிமீ ரதோற்சவதினத்திற்கு றினமாகிய உற்சவதினத்திலே, வெகுசனங்க ரோ, சிதம்பர சைவப்பிரகாச வித்தியாசாலையி அதிபிரபல நியாயங்களோடும் எடுத்துக்காட்டி, ர்களாற் சொல்லியவைக ளெல்லாவற்றையுங் டித்துப பிரசங்கித்தார். அந்தஸ்தலத்திலே சில ருந்து, பின்சென்னபட்டணம் போனார்.

ரம்பராலய பூசகர்களுடைய சிவநிந்தை, சிவாக தை, சிவனடியார்நிந்தையெல்லா மொருபுறத்தி . கருங்குழி இராமலிங்கபிள்ளையென்னு மொரு ரஞ் சிவானுபூதிபெற்றவரென்றும், ஒதாதுணர் ரெனறு தம்மைச்சொல்லியும், அம்மட்டில்நில் உள்ளபடி சிவானுபூதிச் செல்வர்களாகிய ரான சம்பந்தமூர்த்திநாயனார், திருநாவுக்கரசுநா , சுந்தரமூர்த்திநாயனார், மாணிக்கவாசகசுவாமி முதலிய உண்மைநாயன்மார்கள் சிவானுக்கிர தம்பெற்று, அவ்வனுக்கிரகத்தினாலே அவர்கள செய்த அருட்பாக்களைத் தள்ளித் தாஞ் செய்து ட்ட பாக்களை ஆன்மார்த்தபூசை பரார்த்தபூசை யும் உற்சவங்களிலும் சந்தியாகாலங்களிலும் சனேந்திரர்களாகியசிலரைப்பாராயணம்பண்ணு

ம்படி செய்தும், தம்மைத் திருவருட்பிரகாசவள்ளலெ ன்றும், தாஞ்செய்த பாக்களை அருட்பாக்களென்று நாமாகச்சொல்லியும், பிறரைக்கொண்டுசொல்லுவி த்தும், அம்மட்டில்நில்லாது மாணிக்கவாசகசுவாமி கள் அருளிச்செய்த திருவாசகம், திருக்கோவையார் என்னு மிரணடையும் சபாநாயகர் நமது அருமைத் திருக்கரங்களால் எழுதியதுபோல வந்து எழுதுவா ரென்றும், அவைகளையெழுதும் பொருட்டுப் பொன் னேடும் பொன்னெழுத்தாணியுந் தாம்செய்த ரசவா சத்திறுலே பெற்றுக்கொண்ட பொன்னினுலே செய் தல்வேண்டுமென்றும், அம்மட்டோ அத்திரவியத்தை க்கொண்டுத் தானே பார்பதிபுரமெனப் பெயர்பெற்ற ஒரு ஆலயமும் அதனுள்ளே ஒருகனகசபையுங் கட்டி சசிதம்பரசபாநாயகரை அதிலே எல்லாருங்காண நடு ப்பகலில் எழுந்தருளிவந்து நின்று திருந்தம்பண்ணும் படி செய்வேமென்றும், அம்மட்டில்நில்லாது செத் தவர்களை உயிர்ப்பிப்போமென்றும், புத்திரரில்லாதவ ர்களுக்குப் புத்திரபாக்கியங் கொடுப்போமென்றும், குருடர், செவிடர் முதலானவர்களுடைய குறைவு பாடுகளை நீக்குவோமென்றும், பசித்தவர்களெல்லா ருக்கும் அன்னங்கொடுப்போமென்றும், தண்ணீரா ல் விளக்கெரித்தோமென்றும், பிரமவிட்டுணுக்களா லுந் தேடி அறிதற்கரிய கடவுள் பருக்கைக்சுற்

ைந்த சென்னபட்டணத்தெருவிலே அர்த்த ிரியிலே நடந்துவந்து தமது வீட்டுக்கதவைத் டித்து, மகனே! இதைவாங்கிக்கொள் என்று தம ான்று தந்தாரென்றும், அம்மட்டில்நில்லாது ிக்கவாசகசுவாமிகள் சிதம்பரத்திலே சபாநாயக ன் இரண்டறக்கலந்ததுபோலத் தாமுங்கலப்போ ன்றும், இன்னும் இவைபோலப் பல பிரயோசன வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு திரிவா ர்.

ராமலிங்கபிள்ளை தமக்கு இட்டுக்கொண்ட வல் பெயர்களையாவது, நாமெவ்வளவோ அப்புத ச்செய்தோம் செய்கின்றோம் செய்வோமென்று ல்வதையாவது, தம்முடைய பாக்கள் மிகச்சிற வையென்பதையாவது, சிவபெருமான் சாக்கிரத் ல் தம்மோடுகலந்து பேசுகின்றார் என்பதையா பொறுப்பினும், சிவஞானச்செல்வர்களாகிய சம ாரியர்கள் திருவாய்மலர்ந்தருளிய அருட்பாக்களை ந்தித் தமது பாக்களைப் பாராயணம்பண்ணுவித் பும், தம்மை அச்செல்வர்களோடு சமத்துவமு யர் என்பதையும், தமது பாக்கள் அவர்களுடைய களினுஞ் சிறந்தவையென்பதையும் ஒருவாற்று சகிக்கலாற்றாத நாவலர், பலசனங்களெதிரே, வாரதிருவாசக முதலியவை பசுகரண நீங்கிச் சிவ ம்பெற்ற நாயன்மார்களாலே அருளிச்செய்யப்

பட்டனவென்றும், இவைகளை சிவாலய நித்திய நைமித்தியங்களினும் சந்தியாவந்தனம் சிவபூசை முதலியனவைகளினுட ஓதத் தகுவனவென்றும், இவைகளை வேதத்திலும்பார்க்கத் தமக்கு அதிக பிரீதியுள்ளவைகளென்று எமது பிதாவாகிய சிவபெருமான் தமது அருட்சத்தியும் நமது உலகமாதாவுமாகிய உமாதேவியார் கேட்கும்படி திருவாய்மலர்ந்தருளிய சிவரகசியத்திலே கூறப்பட்டிருக்கின்றன என்பனவை முதலிய பல முக்கியப்பிரமாணங்களைக் காட்டிப் பிரசங்கித்தார். அப்பிரசங்கங்களுக்குப் பின்பு பிள்ளையினமாணக்கர்கள் சிலர் வேண்டியவாறே அவருக்கு விரோதமாகத் தூஷித்தார்கள். தூஷித்தும், நமது மனச்சான்றுக்கு விரோதமில்லாமலும் பரங்கருணைத் தடங்கடலாகிய சிவபெருமானின் திருவருளையே முன்னிட்டு, அவரால் அருளிச்செய்யப்பட்ட வேதசிவாகமங்களின் விதிவிலக்குகளையும், அவருடைய மெய்யடியாரின் மகிமைகளையும் பேசினாராதலால், அவர்களுடைய தூஷணம் அவருக்கு ஒரு தீமையையுஞ் செய்திலது. அப்போது அவருக்கு வயசு சஉ ஆயிற்று.

சைவப்பிரகாச வித்தியாசாலைகளுக்கு மூன்றும் பாலபாடம் அவசியம் வேண்டியிருந்தபடியால், வேதசிவாகமங்களிலும், இதிகாசபுராணங்களிலும், நீதிநூல்களிலும் உள்ளவைகளைத் திரட்டி வசனரூபமாகவெழுதி, இறுதியிலே ஔவையாரருளிச்செய்த

